சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

மகாவித்துவானாகிய

ம. ா. ா. ஸ்ரீ திரிசிரபுரம்

## மீனாட்சிசுந்தரம்பிள்ளை

இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்பூத்தமகரந்தப்புதுமதுவச்செழுங்கமலப்பேர்குட்டிவாழ்வேசா
றென்பூத்தநான்முகத்தோனலனுலமுகத்தோனேதெளியினென்னக்
கொன்பூத்ததமிழ்வழங்குநிலத்தினறமிவையேழ்தருதிகொண்டாட
மின்பூத்தசெங்கதிரின்வள்ளுவனென்றொருநாமமேவத்தோன்றி.

பொலிதரமுன்னுணர்ந்தமறையகத்தமைந்தவறமுதனான்மொருளுமேன்மே
லொலிதரமற்றநான்குமொருமூன்றினடக்கியின்றெழுமுக்கியாங்கு
மெலிதரவில்லவாமுதற்பேருருவொருசிற்றுருவகம்விளங்கன்மான
நலிதரநீர்சிலசொல்விறபலபொருளுஞ்செறித்துநவைநண்ணாதாக. உ

மொழிசுருங்கல்பொருள்விளங்கன்மொழியினிதாதன்னலமொழிபுணர்த்தல்
வழியமையோசையிறபொலிதலாழ்ந்திருத்தன்முறைநிறுவன்மலைவுநீர்தல்
பொழிவிழுமியதுபயத்தல்காட்டாதலிப்பத்தும்பொலியவாய்ந்த
கழிபொருளுங்கருதணியுநோக்குமிடந்தொறுங்கிடந்துகளிப்புச்செய்ய. ங

மையேறுபொழின்மதுரைமாநகரத்தருட்புலமைமாட்சியாருன
கையேறுதிருமூலாகமச்சோதிமறைமுனைந்தகனிவாய்விண்டு
பையேறுமணிபொருமோர்துதிகவிசொற்றிடப்பலரும்பரவிப்போற்ற
வையேறுதிருக்குறளென்றொருநூல்செய்துலகுவப்பவளித்தானாக. ச

அன்னாறபெருமையுணர்ந்தான்றபாணினிபுரிந்தவரியநூலுக்
கின்னதீர்பதஞ்சலிபோறபலருரையும்வியாப்பியமாயிருக்கநூ
முன்னவாம்வியாபகமேயாகநூற்கருத்துணர்ந்தேமொழிந்தாரொன்ன
நன்னர்வான்புகழ்ப்பரிமேலழகருரையியற்றவதைநாடியாரும். ரு

ஏட்டுவரைத்தெடுத்துணர்ந்தலருநானிலெவ்வெனுஞ்சாலெழுத்துக்குற்ற
மோட்டிப்பவையுணராராய்ப்பரம்பரையொன்றேநூறியொழிந்தாரத்தோ
மாட்டிவைனையுணர்ந்தனையமூலமும்பேருரையுமுழும்வருத்தவாறே
ஈட்டிதலிலாவெழுத்திலையிலெனவுலகுபுகழ்செய்யோடன. சு

னூட னூடன்றமர் தாக்கிய தெய்வக் — கொன்னுறை வயிரவா—கோட்டுமா
னினங்க—ளகைப்பொடு வாயவெரீஇத் திகைத்தோட் டெடுத்துச்—செல்வழி
யின்றித் திசைதொறு மிமைபா—நாட்டமொடு வட்கி வாட்டமொடு நிற்ப—
வயங்கொடிறு மாந்து நயங்கிமதங் கவிழ்த்து— நிகரிகந் தலவும் புகர்முக
க் களிற்றன்— கடையுகத் தெழுந்த கருங்கட லெனனப்— படையொடு து
வன்றிய வடையல ருடையா—நெஞ்சுபறை கொட்ட வஞ்சிவிழி விளாப்ப—
வேறறிடி போல விடையறு திரட்டுவ—கூறறுற மெறுழ்வலி யேற்றுரி முர
சினன்—பலப்பல வரசர் நலப்பமே லுயார்த—பைங்கொடி யடங்கலும் பணி
செயூ நிற்பத—நிசழ்ந்துமே லோங்கிச் சிறந்தெழிற் சயமக— ளாவிக் கிணை
யதாங் காவிக் கொடியினோனை—யீடா ருலகங் கோடா நெறியினிற் —றுலவு
ற நடாத்து நிலவுசெங் கோலினன்— றண்ணிய நலநிகெழு புண்ணிய மேரு
—நிறைதரு கருணைக் குறையுணல வினபத—திரையெறி கல்விக் கரைபொரு
கடனாறுந்—தண்ணளி யரும்பிய புண்ணிய மலர்ந்து—நன்றிபல பழுத்து நி
ன்றகுண தாரு— நித்திய வருட்சிவ பத்தியின பைங்கூழ —புகழ்தரு மிரவ
லர் நிகழ்தரு குரிபபரிந—துதவிடு சீசா லதலசிந தாமணி—விளங்குறு மு
யிரொறு மிளங்கோ தனங்கள்— கூட்டமிட் டருந்தி யேப்பமிட் டுவப்பக்—
கண்ணிய வின்றவை நண்ணிய வருட்பா—லேமமொடு சுரக்குசு காம தேனு
—பொய்வகைச் சமயப புதைதயிருள புகைப—மெய்வகை யொளிவிரி சை
வ சிகாமணி —யென்றுயபற பலரு மெடுத்தினி தியம்பக—குணமலி னிலமகள்
குறுகலிப பெயர்ந்—தவஞானம்பெறு சிவஞான தேவ—ரியற்றிய தவத்தா
னயக்கத் தோனறியோன் —பொதியவிழ் கடுக்கையொடு மதத்வழ் சடில—
மன்னு சாமிநன் மலர்க்கழல் பழிச்சும்—பொனனு சாமிமால் புகனறனு
க—வடங்கிய தழுநு வடங்கலு நிமிர்தசெனத—தனிநதனி மொயப்பத் து
ளித்தலர் தேமாங—கனிசிறு வளியாற கமலமென பொருட்டிற— ருக்குநீலி
யுடைந்து வாக்குறு பைந்தே— னீத்தட நிரப்பு மிழநனா டுடி—னிலமகன்
முகமெனக் குலவும்பாழ்ப பாணைத்—தநவளஞ் செறிந்து பொலிந்தலிற பலக
லை—வலலோர் புகழு நலலூ ராளி—மதலி னலமிகுழு மதமிலட் குரிசில்
—வெரிமுப ஞானறிய வரியமெய்த தவததாற—பொறைபருள் சாந்த நிறை
கொலட வாபனமயென்— றின்னநற குணங்களோர மனனிய வுருக்கொடு—
வந்தென் றியாவரும் வழங்கிட வந்தோன்— கல்வியங் கடலைக் கடபபவா
சமககோர்—சொல்லியன புணைபெனத துரிசற நிற்போ—னிருவகைப பிரம
சரியநன் னெறியின்—மபறறலை புகுந்தா கயிட்டிக நிலையினன—கறபனை கட
நத சிறபாஞ் சடாதரா—கனவினு நனவினுங் கழலாக் கருத்தனன்—பழிதரு
முதுநிப் பகுபபெலா மொருவி— யழிவில்லப ரின்ப மளிக்குறு முத்தியை—
யெளிதினிற் றெரிந்துப பளகிலின் புறுதஞ்—சைவசித்த தாந்த மெயதரு ப
னுவலை—வையக திரிபற வகத்தினன் குணாகரோன்—கையற விகந்த கருணை
யங் கடலோன்—கூறுசீர் புனையு மாறுமுக நாவலன—பாவிப வுவப்பிற் பதி
ச்சனன்—விரவிய வலகம் விளக்குதற் பொருட்டே.

---

முற்றிற்று.

உ

கணபதி துணை.

# திருவள்ளுவர்குறள்.

## பரிமேலழகருரை.

---

## அறத்துப்பால்.

---

### உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத்தழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோராலெடுக்கப்பட்ட பொருள் நான்கு: அவை அறம், பொருள், இன்பம், வீடென்பன.* அவற்றுள், வீடென்பது சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனைமூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம் வழக்குத் தண்டமென மூவகைப்படும்.†

அவற்றுள், ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று‡ அவ்வவற்றிற்கோதிய அறங்களின் வழுவாதொழுகுதல்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முண்மாறுபட்டு அப்பொருண்மேற்சொல்வது. அது உடன்கோடன்முதற் பதினெட்டுப்பதத்ததாம்.§

---

* அறம் பொருள் இன்பம் வீடென்பனவற்றை வடநூலார் முறையே தருமம் அருத்தம் காமம் மோக்ஷமென்பர்.

† ஒழுக்கம் வழக்குத் தண்டமென்பனவற்றை வடநூலார் முறையே ஆசாரம் விவகாரம் பிராயச்சித்தமென்பர்.

‡ நிலை— ஆச்சிரமம்.

§ விவகாரபதம் பதினெட்டாவன கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், கல்கியதைகல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையனல்லான்விற்றல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகெடுத்தல், நிலவழக்கு, மாதராடவர்தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு எனவிவை.

தண்டமாவது அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினு ரை அந்நெறி நிறுத்துதற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தகவொறுத்தல்.

இவற்றுள் வழக்குந்தண்டமும் உலகநெறி நிறுத்துதற்பயத்தவாவதல்லது ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு உறுதிபயத்தற்சிறப்பிலவாகலானும், அவைதாம் நூலானேயன்றி உணர்வுமிகுதியானுந் தேயவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றையொழித்து, ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமெனவெடுத்துக்கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து, எல்லார்க்குமொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறந் துறவறமென இருவகை நிலையாற் கூறப்பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறிக் கணின்று அதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படுவதாகலின், அதனை முதற்கட் கூறுவான்றொடங்கி, எடுத்துக்கொண்ட இலக்கியமினிதுமுடிதற்பொருட்டுக் கடவுள்வாழ்த்துக் கூறுகின்றார்.

---

# பாயிரம்.

## முதல் அதிகாரம்.— கடவுள் வாழ்த்து.

அஃதாவது கவி தான் வழிபடுகடவுளையாதல் எடுத்துக்கொண்டபொருட்கு ஏற்புடைக்கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளையெனவறிக: என்னை! சத்துவமுதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டாகலான். அம்மூன்றுபொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரெனவுணர்க.

க. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. க.

இதன்பொருள். எழுத்தெல்லாம் அகர முதல— எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன:— உலகு ஆதிபகவன் முதற்று— அதுபோல உலகம் ஆதிபகவனாகிய* முதலையுடைத்து. என்றவாறு.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத்தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற்பிறத்தலானும், ஆதிபகவற்குத்தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானு

---

* ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னுமாறுக்கும் பகமென்னும் பெயருண்மையால், பகவனென்பதற்கு இவ்வாறுகுணங்களையுமுடையோனென்பது பொருள்.

ங் கொள்க. தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி, எழுத்தெல்லாமென்றார். ஆதிபகவன் என்னுமிருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென்றது ஈண்டுயிர்கண்மேனின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றேயென உலகின்மேல்வைத்துக் கூறினார்; கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுளதுண்மை கூறப்பட்டது. (௧)

௨. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். ௨

இ-ள். கற்றதனால் ஆய பயன் என்—எல்லாநூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வியறிவானாய பயன் யாது— வாலறிவன் நற்றாள் தொழாரெனின்— மெய்யுணர்வினையுடையானது நல்ல தாள்களைத் தொழாராயின்! எ-று.

எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாய், ஈண்டின்மை குறித்துநின்றது. கொல்லென்பது அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின், நற்றாளென்றார். ஆகமவறிவிற்குப் பயன் அவன்றாளைத் தொழுது பிறவியறுத்தலென்பது இதனாற் கூறப்பட்டது. (௨)

௩. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். ௩

இ-ள். மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்—மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார்— நிலமிசை நீடு வாழ்வார்— எல்லாவுலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார். எ-று.

அன்பானினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், ஏகினானென இறந்தகாலத்தாற் கூறினார்; என்னை? "வாராக் காலத்து நிகழுங் காலத்து-மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்— விரைந்த பொருள வென்மனார் புலவர்." என்பதோத்தாகலின். இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர் பெயர்பற்றிப் பிறிதோர்கடவுட்கேற்றுவாருமுளர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல். (௩)

௪. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. ௪

இ-ள். வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு—ஒருபொருளையும் விழைதலும் வெறுத்தலுமில்லாதவனடியைச் சேர்ந்தார்க்கு— யாண்டும் இடும்பை இல—எக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா. எ-று.

பிறவித்துன்பங்களாவன தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமென மூவகையான் வருந்துன்பங்கள். அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டுமின்மையின், அவை காரணமாக வரும் மூவகைத்துன்பங்களும் இலவாயின. (௪)

௫. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. ௫

இ-ள். இருள் சேர் இருவினையும் சேரா— மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை* தீவினையென்னு மிரண்டுவினையும் உளவாகா— இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு— இறைவனது மெய்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து. எ-று.

இன்னதன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் இருவினையுஞ் சேராவென்றுங் கூறினார். இறைமைக்குணங்களிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள்சேராவாகலின், அவை முற்றவுமுடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது. புரிதல் எப்பொழுதுஞ் சொல்லுதல். (ரு)

சு. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். சு

இ-ள். பொறி வாயில் ஐந்து அவித்தான்— மெய், வாய், கண், மூக்குச், செவி யென்னும் பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது — பொய் தீர் ஒழுக்கநெறி நின்றார்— மெய்யான ஒழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார்— நீடு வாழ்வார்— பிறப்பின்றி எக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார். எ-று.

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கட்செல்கின்ற அவாவு மைந்தாயிற்று. ஒழுக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின், ஆண்டையாறனுருபு செய்யுட்கிழமைக்கண்வந்தது, கபிலரது பாட்டு என்பதுபோல. இவைநான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் அவனெறிநிற்றலுஞ் செய்தார் வீடு பெறுவரென்பது கூறப்பட்டது. (சு)

எ. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது. எ

இ-ள். தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்— ஒருவாற்றானுந் தனக்கு நிகரில்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கல்லது, — மனக்கவலை மாற்றல் அரிது— மனத்தின்கணிகழுந் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது. எ-று.

"உறற்பால-நீண்டா விடுத லரிது." என்றாற்போல ஈண்டு அருமை இன்மைமேனின்றது. தாள் சேராதார் பிறவிக்கேதுவாகிய காம வெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்து அவற்றான் வருந்துன்பங்களுள் அழுந்துவரென்பதாம். (எ)

---

* ஈண்டு நல்வினையென்றது அழிதன்மாலையவாய துறக்க வின்பமுதலிய காமியங்களைப் பயப்பனவாகிய வேள்வி முதலியவற்றை. இவை வீட்டுக்கு நேரோ வாயிலாகிய தத்துவஞானத்தைப் பயவாமைமாத்திரையேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலுமுடையனவாம். ஆதலால், இந்நல்வினை தீவினையிரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கண் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முளொப்பனவாமெனக. சரியை கிரியை யோகங்கள் ஞானம் வாயிலாக வீடு பயத்தலின், ஈண்டு நல்வினையென்றது அவற்றையன்றெனக.

௮. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. ௮

இ-ள். அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்— அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது— பிற ஆழி நீந்தல் அரிது— அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது. எ-று.

அறம், பொருள், இன்பமென உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப்பொருளுமின்பமும் பிறவெனப்பட்டன. பலவேறுவகைப்பட்ட அறங்களெல்லாவற்றையுந் தனக்கு வடிவாகவுடையனாகலின், அறவாழியந்தணனென்றார். அறவாழியென்பதனைத் தருமசக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென்றுரைப்பாருமுளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே யழுந்துவராகலின், நீந்தலரிதென்றார். இஃதேகதேசவுருவகம். (௮)

௯. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை. ௯

இ-ள். கோள் இல் பொறியிற குணம் இல— தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள்போலப் பயன்படுதலுடையவல்ல— எண்குணத்தான் தாளை வணங்காத தலை— எண்வகைப்பட்ட குணங்களையுடையானது தாள்களை வணங்காத தலைகள். எ-று.

எண் குணங்களாவன தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை எனவிவை.* இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. அணிமாவை† முதலாகவுடையனவெனவும், கடையிலாவறிவை‡ முதலாகவுடையனவெனவும் உரைப்பாருமுளர். காணாத கண் முதலியனபோல வணங்காத தலைகள் பயனிலவெனத் தலைமேல்வைத்துக் கூறினார்; கூறினாரேனும், இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே

* இறைவன் எண்குணமுடையனென்பது "எட்டு மூர்த்தியாய் நின்றியலுந்தொழி — லெட்டு வான்குணத் தீசனெம் மானற்றனை—யெட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முள்ளே—யெட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே." என்னுந்திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானும் "இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினானை யிறையவனை மறையவனை யெண்குணத்தினானைச்— சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ் சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை—யரும்புயர்ந்த வரவிந்தத் தணிமலர்க ளேறி யன்னங்கள் விளையாடு மகன்றுறையி னருகே—கரும்புயர்ந்து பெருஞ்செந்நெ னெருங்கிவிளை கழனிக் கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே." என்னுஞ் சுந்தரமூர்த்திநாயனார் தேவாரத்தானும் உணர்க.

† அணிமா முதலிய எண்சித்திகளாவன அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசிதை, வசிதை எனவிவை.

‡ கடையிலாவறிவு முதலிய எண்குணங்களாவன கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு எனவிவை. இவ்வாறு ஆருகதநூலிற் கூறப்பட்டது.

பயனிலவென்பதூஉங்கொள்க. இவை மூன்றுபாட்டானும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலுஞ் செய்யாவழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.(க)

கo. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். கo

இ-ள். இறைவன் அடி (சேர்ந்தார்) பிறவிப் பெருங்கடல் நீந்துவர்— இறைவனடியென்னும் புணையைச் சேர்ந்தார் பிறவியாகிய பெரியகடலை நீந்துவர்:— சேராதார் நீந்தார்— அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுளழுந்துவர். எ-று.

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், பிறவிப்பெருங்கடலென்றார். சேர்ந்தாரென்பது சொல்லெச்சம். உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், அவ்வாறன்றி மாறி நினைப்பார்க்கு அஃதறாமையுமாகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன. (கo)

---

## உ ம் அதி.— வான் சிறப்பு.

அஃதாவது அக்கடவுளதாணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

கக. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

இ-ள். வான் நின்று உலகம் வழங்கி வருதலால்— மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான்,— தான் அமிழ்தமென்று உணரற்பாற்று— அம்மழைதான் உலகத்திற்கு அமிழ்தமென்று உணரும் பான்மையை யுடைத்து. எ-று.

நிற்பவென்பது நின்றெனத் திரிந்து நின்றது. உலகமென்றது ஈண்டுயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது பிறப்பிடையறாமையின எஞ்ஞான்றும் உடம்பொடு காணப்பட்டு வருதல். அமிழ்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை அமிழ்தமென்றுணர்கவென்றார். (க)

கஉ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. உ

இ-ள். துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி— உண்பார்க்கு நல்ல வுணவுகளை உளவாக்கி,— துப்பார்க்குத் துப்பு ஆயதூஉம் மழை— அவற்றையுண்டொர்க்குத் தானும் உணவாய் நிற்பதூஉம் மழை. எ-று.

தானுமுணவாதலாவது தண்ணீராயுண்ணப்படுதல். சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின், அஃறிணைக்கும் இஃதொக்கும். இவ்வாறு உயிர்கள்து பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கிவருதலுடையவாயினவென்பதாம். (உ)

கங. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. ங

இ-ள். விண் இன்று பொய்ப்பின்— மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின்,— விரி நீர் வியன் உலகத்துள்— கடலாற் சூழப்பட்ட அகன்றவுலகத்தின்கண்— நின்று உடற்றும் பசி— நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி. எ-று.

கடலுடைத்தாயினும் அதனாற் பயனில்லை யென்பார், விரிநீர் வியனுலகத்தென்றார். உணவின்மையின், பசியான் உயிர்கள் இறக்குமென்பதாம். (௩)

கச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

இ-ள். உழவர் ஏரின் உழார்— உழவர் ஏரானுழுதலைச்செய்யார்,— புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால்— மழையென்னும் வருவாய் தன் பயன் குன்றின். எ-று.

குன்றியக்காலென்பது குறைந்துநின்றது. உணவின்மைக்குக் காரணங்கூறியவாறு. (௪)

கரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. ௫

இ-ள். கெடுப்பதூஉம்— பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம்— கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதூஉம்— அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப் பெய்து முன்கெடுத்தாற்போல எடுப்பதூஉம்— எல்லாம் மழை— இவையெல்லாம் வல்லது மழை. எ-று.

மற்று வினைமாற்றின்கண்வந்தது. ஆங்கென்பது மறுதலைத்தொழிலுவமத்தின்கண் வந்த உவமச்சொல். கேடுமாக்கமும் எய்துதற்குரியார் மக்களாதலின், கெட்டார்க்கென்றார். எல்லாமென்றது அம்மக்கண்முயற்சி வேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கடாம் பலவாதல் நோக்கி. வல்லதென்பது அவாய்நிலையான்வந்தது.* மழையினதாற்றல் கூறியவாறு. (௫)

கசு. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. ௬

இ-ள். விசும்பின் துளி வீழின் அல்லால்— மேகத்திற்றுளி வீழிற் காண்பதல்லது,— மற்று ஆங்கே பசும்புற்றலை காண்பு அரிது— வீழாதாயின், அப்பொழுதே பசும்புல்லினது தலையுங் காண்டல் அரிது. எ-று.

விசும்பு ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண்வந்தது. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஓரறிவுயிரும் இல்லையென்பதாம். (௬)

கஎ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். ௭

இ-ள். நெடுங்கடலும் தன் நீர்மை குன்றும்— அளவில்லாத கடலும் தன்னியல்பு குறையும்,— எழிலி தான் தடிந்து நல்காதாகிவிடின்— மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட்பெய்யாது விடுமாயின். எ-று.

---

* அவாய்நிலை ஒருசொல் மற்றொருசொல்லை அவாவிநிற்றல். இவ்வாறு அவாய்நிலையால் வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்தியாகாரமென்பர்.

"உம்மை சிறப்பும்மை, தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும், மணி முதலாயின படாமையுமாம். ஈண்டுக் குறைத்தலென்றது முகத்தலை; அது யகடல்குறைபடுத்தநீர்." யகடல் குறைபடவெறிந்து" என்பதனும் அறிக. மழைக்கு முதலாய கடறகும் மழை வேண்டுமென்பதாம். இவையேழுபாட்டானும உலகநடத்தற்கேதுவாதல் கூறப்பட்டது. (எ)

க அ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. அ

இ-ள். வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது—தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவும் பூசையும் நடவாது,— வானம் வறக்குமேல்— மழை பெய்யாதாயின். எ-று.

நைமித்திகத்தோடு கூடிய நித்தியமென்றாராகலின், செல்லாதென்றார். உம்மை சிறப்பும்மை. நித்தியத்திற்றாழ்வுதீரச் செய்வது நைமித்திக* மாதலின், அதனை முறகூறினார். (அ)

கக. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். கூ

இ-ள். வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா— அகன்றவுலகின்கண் தானமுந் தவமுமாகிய இரண்டறமும் உளவாகா,— வானம் வழங்காதெனின்—மழை பெய்யாதாயின். எ-று.

தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின. பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின்மேலும், தவம் துறவறத்தின்மேலும் நின்றன. (கூ)

உ0. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. க0

இ-ள். யார் யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது எனின்—எவ்வகை மேம்பாட்டார்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின்,— ஒழுக்கு வான் இன்று அமையாது— அந்நீர் இடையறுதொழுகும் ஒழுக்கும் வானையின்றி யமையாது. எ-று.

பொருளின்பங்களை உலகியலென்றார், அவை இம்மைக்கண்ணவாகலின். இடையறுதொழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல். நீரின்றமையாதுலகென்பது எல்லாராலுந் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக்கும் வானின்றமையாமை தெளியப்படுமென்பார், நீரின்றமையாதுலகெனினென்றார். இதனை நீரையின்றி யமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிரம்பாதென உரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அறம் பொருளின்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது. (க0)

---

* நைமித்திகம்—நிமித்தத்தாலாவது.

“தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்” என்புழிப்போல இருமையென்றது ஈண்டெண்ணின்கணின்றது.* பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது; இதனால் திகிரியுருட்டி உலகமுழுதாண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது. இவை மூன்றுபாட்டானும் நீத்தார்பெருமையே எல்லாப்பெருமையினும் மிக்கதென்பது கூறப்பட்டது. (௩)

௨௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. ௪

இ-ள். உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்—திண்மையென்னுந் தோட்டியால் பொறிகளாகிய யானையைந்தனையும் தத்தம் புலங்கண்மேற் செல்லாமற் காப்பான்—வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து—எல்லாநிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுநிலத்திற்கு ஓர்வித்தாம். எ-று.

இஃதேகதேசவுருவகம். திண்மை ஈண்டறிவின்மேற்று. அந்நிலத்திற்சென்று முளைத்தலின், வித்தென்றார். ஈண்டுப் பிறந்திறந்து வரும் மகனல்லனென்பதாம். (௪)

௨௫. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி. ௫

இ-ள். ஐந்து அவித்தான் ஆற்றல்—புலன்களிற்செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினானது வலிக்கு—அகல்விசும்பு உளார் கோமான் இந்திரனே சாலும் கரி—அகன்ற வானத்துள்ளாரிறைவனாகிய இந்திரனே அமையுஞ்சான்று. எ-று.

ஐந்துமென்னும் முற்றும்மையும் ஆற்றற்கென்னும் நான்கனுருபுஞ் செய்யுள் விகாரத்தாற்றொக்கன. தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று அவித்தவனதாற்றல் உணர்த்தினானாகலின், இந்திரனே சாலுங்கரியென்றார். (௫)

௨௬. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். ௬

இ-ள். செயற்கரிய செய்வார் பெரியர்—ஒத்த பிறப்பினராய மக்களுள் செய்தற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர்:—செயற்கரிய செய்கலாதார் சிறியர்—அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர். எ-று.

செயற்கெளியவாவன மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலாயின. செயற்கரியவாவன இயமம் நியமம் முதலாய எண்வகை யோகவுறுப்புக்கள், நீரிற்பல கான் மூழ்கல் முதலாய நாலிருவழக்கிற்றாபதபக்கமென்பாருமுளர்,† அவை நியமத்துள்ளே அடங்கலின், நீத்தாரது பெருமைக்கேலாமையறிக. (௬)

* ஈண்டு இருமையென்பதனுள் மைவிகுதி, தன்மையுணர்த்தாது தன்மையுடைப்பொருளையே யுணர்த்தலின், பகுதிப்பொருள் விகுதியென்னுஞ் சுவார்த்த பாவ தத்திதப் பிரத்தியம்.

† நீரிற்பலகான்மூழ்கல் முதலியவெட்டும் “நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்—சோர்சடை தாழச் சுடரோம்பி - யூரடையா—கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்—வானகத் துய்க்கும் வழி.” என்னும் வெண்பாவானுணர்க.

இ-ள். குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி— துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின்முடிவின்கணின்ற முனிவரது வெகுளி,— கணமேயும் காத்தல் அரிது— தானுள்ளவளவு கணமேயாயினும், வெகுளப்பட்டாராற் றடுத்தல் அரிது. எ-று.

சலியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக வுருவகஞ்செய்தார். குணம் சாதியொருமை.* அநாதியாய் வருகின்றவாறுபற்றி ஓரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் கணமேயுமென்றும், நிறைமொழிமாந்தராகலின காத்தலரிதென்றுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் அவராணை கூறப்பட்டது. (௯)

௩0. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். ௧0

இ-ள். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் — எல்லாவுயிர்கண்மேலும் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான்,— அந்தணர் என்போர் அறவோர் — அந்தணரென்று சொல்லப்படுவார் துறவறத்தினின்றவர். எ-று.

பூணுதல் விரதமாகக்கோடல். அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின், அஃது அவ்வருளுடையார்மேலன்றிச் செல்லாதென்பது கருத்து. அவ்வாறாணையுடையராயினும் உயிர்கண்மாட்டருளுடையரென்பது இதனாற் கூறப்பட்டது. (௧0)

## ௪ம் அதி.— அறன்வலியுறுத்தல்.

அஃதாவது அம்முனிவரானுணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப்பொருளுமின்பமும் போலாது, அறன், இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத்தென்பது கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு— மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல" என்றார் பிறரும்.

௩௧. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

இ-ள். சிறப்பு ஈனும்—வீடுபேற்றையுந்தரும்;—செல்வமும் ஈனும்—துறக்கம் முதலிய செல்வத்தையுந்தரும்;— உயிர்க்கு அறத்தின் ஊங்கு ஆக்கம் எவன— ஆதலான் உயிர்கட்கு அறத்தின் மிக்க ஆக்கம் யாது? எ-று.

எல்லாப்பேற்றினுஞ் சிறந்தமையின், வீடு சிறப்பெனப்பட்டது. ஆக்கந்தருவதனை ஆக்கமென்றார். ஆக்கம் மேன்மேலுயர்தல். ஈண்டுயிரென்றது மக்களு

---

* சாதியொருமையாவது ஒருசொல் ஒருமையீறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைப் பன்மை வினையீறாக மேல் வந்து முடிக்குஞ் சொற்களுமின்றித் தானே பன்மைப்பொருளுணர்த்துவது. இதனை வடநூலார் சாத்யேகவசனமென்பர். "ஈறு தோன்றிய சாதி யொருமையு— மீறுதோன்றாச் சாதி யொருமையு—மெனவிரு திறப்படு மிருதிணை மருங்கினும்." "பகிவினை — பொறுத்தாரே பேர்ந்தா ரிடை." "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை" என்புழிப் பொறுத்தான் அஞ்சுவது என ஈறுதோன்றிய சாதியொருமை வரும். "தென்புலத்தார் தெய்வம்" "குணமென்னுங் குன்றேறி நின்றார்" என்புழித் தெய்வம் குணம் எனவீறுதோன்றாச் சாதியொருமை வரும்.

யினை, சிறப்புஞ் செல்வமும் எய்துதற்குரியது அதுவேயாகலின். இதனால் அறத்தின் மிக்கவுறுதி இல்லையென்பது கூறப்பட்டது. (௧)

௩௨. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. ௨

இ-ள். அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை—ஒருவனுக்கு அறஞ்செய்தலின் மேற்பட்ட ஆக்கமுமில்லை:— அதனை மறத்தலின் ஊங்கு கேடு இல்லை—அதனை மயக்கத்தான் மறத்தலின்மேற்பட்ட கேடுமில்லை. எ-று.

அறத்தினூஉங்காக்கமுமில்லையென மேற்சொல்லியதனையே அனுவதித்தார்,* அதனாற்கேடுவருதல் கூறுதற்பயனோக்கி. இதனால் அது செய்யாவழிக் கேடுவருதல் கூறப்பட்டது. (௨)

௩௩. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். ௩

இ-ள். ஒல்லும் வகையான்—தத்தமக்கியலுந்திறத்தான்— அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல்— அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃதெய்துமிடத்தானெல்லாஞ் செய்க. எ-று.

இயலுந்திறமாவது இல்லறம் பொருளளவிற்கேற்பவும், துறவறம் யாக்கை நிலைக்கேற்பவுஞ்செய்தல். ஓவாமை இடைவிடாமை. எய்துமிடமாவன மனம் வாக்குக் காயமென்பன. அவற்றாற் செய்யும் அறங்களாவன முறையே நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலுமெனவிவை. இதனான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (௩)

௩௪. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. ௪

இ-ள். மனத்துக்கண் மாசு இலன் ஆதல் — அவ்வாற்றான் அறஞ்செய்வான் தனமனத்தின்கட் குற்றமுடையனல்லனாக;— அனைத்து அறன் — அவ்வளவே அறமாவது;—பிற ஆகுல நீர—அஃதொழிந்த சொல்லும் வேடமும் அறமெனப்படா, ஆரவார நீர்மைய. எ-று.

குற்றம் தீயனசிந்தித்தல். பிறரறிதல்வேண்டிச் செய்கின்றனவாகலின், ஆகுலநீரவென்றார். மனத்துமாசுடையனாயவழி அதனைவழியவாகிய மொழி மெய்களாற்செய்வன பயனிலவென்பதூஉம் பெறப்பட்டது. (௪)

௩௫. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம். ௫

இ-ள். அழுக்காறு— பிறராக்கம் பொறாமையும்—அவா—புலன்கண்மேற் செல்கின்ற அவாவும்—வெகுளி— அவையேதுவாகப் பிறர்பால்வரும் வெகு,

* அனுவதித்தலெனினும் வழிமொழிதலெனினும் ஒக்கும். அனுவாதமாவது முன்னர்ப்பெறப்பட்டதொன்றனை வேறொன்று விதித்தற்பொருட்டுப் பின்னருமெடுத்தோதுதல். அதனால் அது கூறியது கூறலென்னுங்குற்றமாகாது வழிமொழிதலென்றுமிற்று. வழிமொழிதற்கு முன்னர்ப் பெறப்பட்டதனைப் புரோவாதமென்பர் வடநூலார். ஈண்டுப் புரோவாதம் "அறத்தினூஉங் காக்கமெவனோ" என்பது.

ளியும்—இன்னாச்சொல்— அதுபற்றிவருங் கடுஞ்சொல்லுமாகிய— நான்கும் இழுக்கா இயன்றது அறம்—இந்நான்கினையுங் கடிந்து இடையறாது நடந்தது அறமாவது. எ-று.

இதனான் இவற்றோடு விரவியியன்றது அறமெனப்படாதென்பதூஉங்கொள்க. இவையிரண்டுபாட்டானும் அறத்தினதியல்பு கூறப்பட்டது. (௫)

௩௬. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. ௬

இ-ள். அன்று அறிவாம் என்னாது அறம் செய்க— யாம் இதுபொழுது இளையமாகலின் இறக்குநான்று செய்துமெனக் கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க;—அது பொன்றுங்கால் பொன்றாத் துணை—அவ்வாறு செய்தவறம் இவ்வுடம்பினின்றும் உயிர் போங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம். எ-று.

மற்றென்பது அசைநிலை. பொன்றாத் துணையென்றார், செய்த வுடம்பழியவும் உயிரோடொன்றி ஏனையுடம்பினுஞ் சேறலின். இதனான் இவ்வியல்பிற்றாய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்கவென்பது கூறப்பட்டது.

௩௭. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. ௭

இ-ள். அறத்து ஆறு இது என வேண்டா — அறத்தின் பயன் இதுவென்று யாம் ஆகமவளவையான் உணர்த்தல்வேண்டா,—சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை—சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவைதன்னானே உணரப்படும். எ-று.

பயனை ஆறென்றார், பின்னதாகலின். எனவென்னுமெச்சத்தாற்சொல்லாகியவாகமவளவையும், பொறுத்தானோடூர்ந்தானிடையென்றதனாற் காட்சியளவையும் பெற்றாம். உணரப்படுமென்பது சொல்லெச்சம். இதனாற் பொன்றாத் துணையாதல் தெளிவிக்கப்பட்டது. (௭)

௩௮. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். ௮

இ-ள். வீழ் நாள் படாமை நன்று ஆற்றின்— செய்யாது கழியும் நாளுளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின்,— அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல்—அச்செயல் அவன் யாக்கையோடு கூடி நாள் வரும்வழியை வாராமலடைக்குங்கல்லாம். எ-று.

ஐவகைக்குற்றத்தான்வரும் இருவகைவினையுமுள்ள துணையும் உயிர் யாக்கையோடுங்கூடிநின்று அவ்வினைகளினிருவகைப்பயனையும் நுகருமாகலான், அந்நாண்முழுவதும் வாழ்நாளெனப்பட்டது. குற்றங்களைந்தாவன அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன; இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசமென்ப. வினையிரண்டாவன நல்வினை தீவினையென்பன. பயனிரண்டாவன இன்பந் துன்பமென்பன. இதனான் அறம் வீடு பயக்குமென்பது கூறப்பட்டது. (௮)

௩௯. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. ௯

இ-ள். அறத்தான் வருவதே இன்பம் — இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது; மற்ற எல்லாம் புறத்த — அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம் இன்பமாயினுந் துன்பத்தினிடத்த; புகழும் இல — அதுவேயுமன்றிப் புகழுமுடையவல்ல. எ-று.

ஆனுருபு உடனிகழ்ச்சிக்கண் வந்தது, "ஐஞ்ஞூற்றுக்கு கையானோடு உடைய" என்புழிப்போல. இன்பம் காமநுகர்ச்சி, அஃதாமாறு காமத்துப்பாலின் முகத்துச் சொல்லுதும். இன்பத்திற்புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தானவரும் பிறனில்விழைவு முதலாயின அக்கணத்து இன்பமாய்த் தோன்றுமாயினும் பின் துன்பமாய் விளைதலின், புறத்தவென்றார். அறத்தோடு வாராதன புகழுமிலவெனவே, வருவன புகழுமுடைத்தென்பது பெற்றாம். இதனான் அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும் எய்துவரென்பது கூறப்பட்டது. (௩௯)

௪0. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி. ௪0

இ-ள். ஒருவற்குச் செயற்பாலது அறனே — ஒருவனுக்குச் செய்தற்பான்மையது நல்வினையே; உயற்பாலது பழியே — ஒழிதற்பான்மையது தீவினையே. எ-று.

ஒருமென்பன இரண்டும் அசைநிலை. தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது. பழிக்கப்படுவதனைப் பழியென்றார். இதனாற் செய்வதும் ஒழிவதும் விதிக்கப்பட்டன. (௪0)

இவைநான்கும் பாயிரம்.

# இல்லறவியல்.

## ௫ம் அதி.— இல்வாழ்க்கை.

அஃதாவது இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. இன்னிலை அறஞ்செய்தற்குரிய இருவகைநிலையுள் முதலாதலின், இஃது அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௪௧. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை. ௧

இ-ள். இல்வாழ்வான் என்பான் — இல்லறத்தோடு கூடி வாழ்வானென்று சொல்லப்படுவான் — இயல்பு உடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை — அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும் அவர் செல்லும் நல்லொழுக்கநெறிக்கண் நிலைபெற்ற துணையாம். எ-று.

இல்லென்பது ஆகுபெயர். என்பானைச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது.* ஏனை மூவராவார் ஆசாரியனிடத்தினின்று ஓதுதலும்

* எனப்படுவானெனற்பாலது செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படு விகுதி தொக்கு என்பானென நின்றதெனக் கொண்டார் பிரயோகவிவேக நூலாரும் தொல்காப்பியச் சூத்திர விருத்திகாரரும். இவ்வாறு வருவனவற்றை வடநூலார் நயக்கு என்பர்.

விரதங்காத்தலுமாகிய பிரமசரியவொழுக்கத்தானும், இல்லைவிட்டு வனத்தின் கட்மனையொடு சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யுமொழுக்கத்தானும், முற்றத்துறந்த யோகவொழுக்கத்தானுமென இவர்; இவருள் முன்னையிருவரையும் பிரமசரியமேற்கொண்டு கூறினார். இவர் இவ்வொழுக்கநெறிகளை முடியச்செல்லுமளவும் அச்செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலியவுதவி அவ்வவநெறிகளின் வழுவாமற்செலுத்துதலான, நல்லாற்றினின்ற துணையென்றார். (௧)

௪௨. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. ௨

இ-ள். துறந்தார்க்கும் — களைகணானவராற் றுறக்கப்பட்டார்க்கும்— துவ்வாதவர்க்கும்— நல்கூர்ந்தார்க்கும்— இறந்தார்க்கும்— ஒருவருமின்றித் தன்பால் வந்திறந்தார்க்கும்— இல்வாழ்வான் என்பான் துணை—இல்வாழ்வானென்று சொல்லப்படுவான் துணை. எ-று.

துறந்தார்க்குப் பாவமொழிய அவர் களைகணாய் நின்று வேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க்கு உணவு முதலிய கொடுத்தலானும், இறந்தார்க்கு நீர்க்கடன்முதலிய செய்து நல்லுலகின்கட்செலுத்தலானும், துணையென்றார். இவையிரண்டுபாட்டானும் இன்னிலை எல்லாவுபகாரத்திற்குமுரித்தாதல் கூறப்பட்டது. (௨)

௪௩. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை. ௩

இ-ள். தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற—பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென்று சொல்லப்பட்ட— ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை— ஐந்திடத்துஞ்செய்யும் அறநெறியை வழுவாமற்செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம். எ-று.

பிதிராவார் படைப்புக்காலத்து அயனாற்படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி, அவர்க்கிடம் தென்றிசையாதலின், தென்புலத்தாரென்றார். தெய்வமென்றது சாதியொருமை. விருந்தென்பது புதுமை; அஃது ஈண்டாகுபெயராய்ப் புதியராய் வந்தார்மேனின்றது; அவர் இருவகையர், பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல் சுற்றத்தார். எல்லாவறங்களும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின், தன்னையோம்பலும் அறனாயிற்று. என்றவென்பது விகாரமாயிற்று. ஆங்கு அசை. ஐவகையும் அறஞ்செய்தற்கிடனாகலின், ஐம்புலமெனறார். அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று, இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலானென்பதறிக. (௩)

௪௪. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். ௪

இ-ள். பழி அஞ்சிப் பாத்தூண் வாழ்க்கை உடைத்தாயின்— பொருள் செய்யுங்கால் பாவத்தையஞ்சி* யீட்டி, அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினார்க்கும் தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவனில்வாழ்க்கை உடைத்தாயின், — வழி எஞ்ஞான்றும் எஞ்சல் இல்— அவன்வழி உலகத்தெஞ்ஞான்றும் நிற்றலல்லது இறத்தலில்லை. எ-று.

பாவத்தானவந்த பிறன்பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொருளுடையார்மேலும் பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சுமாகலின், பழியஞ்சியென்றார். வாழ்வானதுடைமை வாழ்க்கைமேலேற்றப்பட்டது. (௪)

௪௫. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது. ௫

இ-ள். இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின்— ஒருவனில்வாழ்க்கை தன்றுணைவிமேற்செய்யத்தகும் அன்பினையும் பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத்தினையுமுடைத்தாயின்,— அது பண்பும் பயனும்— அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம். எ-று.

நிரனிறை. இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சொன்றாகாவழி இல்லறங் கடைபோகாமையின், அன்புடைமை பண்பாயிற்று, அறனுடைமை பயனாயிற்று. இவைமூன்றுபாட்டானும் இன்னிலையினின்றான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (௫)

௪௬. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். ௬

இ-ள். இல்வாழ்க்கை அறத்தாற்றின் ஆற்றின்— ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவனாயின்,— புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன்— அவன் அதறகுப் புறமாகிய நெறியிற்போய்ப் பெறும் பயன் யாது! எ-று.

அறத்தாறென்பது பழியஞ்சிப் பகுத்துண்டலும், அன்புடைமையுமென மேற்சொல்லிய ஆறு. புறத்தாறு இல்லைவிட்டு வனத்துச் செல்லுநிலை. அந்நிலையின் இது பயனுடைத்தெனபார், போய்ப்பெறுவதெவனென்றார். (௬)

௪௭. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. ௭

இ-ள். இல்வாழ்க்கை இயல்பினான வாழ்பவன் என்பான்— இல்வாழ்க்கைக்கணின்று அதற்குரிய இயல்போடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான்— முயல்வாருள் எல்லாம் தலை— புலன்களை விட முயல்வாரெல்லாருள்ளும் மிக்கவன். எ-று.

முற்றத்துறந்தவர் விட்டமையின், முயல்வாரென்றது மூன்றாநிலையினின்றாரை. அந்நிலைதான் பலவகைப்படுதலின் எல்லாருள்ளுமெனவும், முயலாதுவைத்துப் பயனெய்துதலின் தலையெனவுங் கூறினார். (௭)

---

* பழியஞ்சியென்பதனைப் பழியையஞ்சி, பழியினஞ்சி எனவிரிக்கலாமென்பது "அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு—மெச்ச மிலவே பொருள்வயினான." என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக.

